உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# நாணயம்.

ரூபாய் அணா பைசா என்பது தான் பண்டமாற்றுக்குப் பிறகு முதல் முதல் உண்டான நாணயமாகும்

அது செம்பினால் செய்யப்பட் டிருத்தலின் பஞ்ச லோகங்களுள் செம்பே முதல் முதல் கண்டறியப்பட்டதெனல் வேண்டும். பைசா என்'பது ஓரணாவில் பன்னிரண்டில் ஓர்பாகமாகலின் செம்பு அரிதாயும் பண் டங்கள் மலிந்தும் அக்காலத்திருந்தன என்பது விளங்குகிறது.

பைசா என்பதற்கு அரசன் தனது மார்பின் விற்குறியைப் பொறித் துச் செய்யப்பட்ட நாணய மென்பது பொருள்.

சாப = வில். அ. து பைசா என நிலைமாறித் திரிந்தது.

இப்பைசாவிலிருந்து தான் நாணயங்கள் பெருகின, நாணய மென்பதற்கு மூங்கிற் குழாயில் பொதிந்து வைப்பதென்பது பொருள். அக்காலத்தில் பொன் முதலியவற்றை மூங்கிற் குழாயில் வைத்துக் காத்து வந்தனர்.

நாணம் நாணயமாயிற்று, நாளம், நாணமாயிற்று. நாணம் = மூங்கிற் குழாய், நாணக்குழாய் = தாலியுருவில் பக்கத்தே கோப்பது.

நாணயம் = சொல் தவறாமையுமாம். அது பொன் முதலியவற்றைக் கொடுக்கல் வாங்கல்களாலுண்டாவது.

பண = ஹணா - (கன்னடம்)

பகரத்தை ஹகாரமாக உச்சரிப்பது கன்னடர் வழக்கு. பணமென்பது முதல் செப்பு நாணயத்தையும் பிறகு பொன் னாணயத்தையும் உணர்த்தி நிற்கும். •

சின்னபணம் பெரியபணம் மென்பன செப்பு நாணயம்.

பணமென்பது ஓர் பொற்காசினை உணர்த்தின் பொன்னாணயம். பண வெடை. பணம் பொக்குசமாம்.

விராகனென்பதற்கு விற்குறி பொறித்த பொன்னாணய மென்பது பொருள், பிறவும் உணர்ந்து கொள்க.

